[19th September 1958

THE HON. SRI C. SUBRAMANIAM : Only an '*Ad hoc*' committee—not a Legislature committee—has been appointed by the Government to go into the question of grants. The matter is under consideration and we hope to take decisions quickly.

SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM : தலைவர் அவர்களே, இந்த உத்தரவு போட்டதற்கு ஒரு வருடத்திற்கு முன்பாகவே மனுப்போட்டு, சகல ஏற்பாடுகளும் செய்துள்ள பள்ளிகளுக்காவது அனுமதி கொடுக்க அரசாங்கத்திற்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதைப்பற்றிய முடிவான கொள்கை கூடிய சீக்கிரத்தில் வகுக்கப்படும். ஆகையால், இப்பொழுது அதுமாதிரி இருக்கக்கூடிய விஷயங்களில்கூட ஒரு முடிவு செய்யாமல் வைத்திருக்கிறோம்.

SRI K. R. VISWANATHAN : தலைவர் அவர்களே, தனித்தவர்கள் நடத்தக்கூடிய ஆரம்பப்பள்ளிகளை உயர்நிலைத் துவக்கப்பள்ளிகளாக தொடர்ந்து நடத்துவதற்கு அனுமதி கொடுப்பதிலே தடை இருக்கக்கூடாது என்று கருதுவது சரியல்லவா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : எல்லா விஷயங்களையும் பரிசீலனை செய்து ஒரு கொள்கையை முடிவு செய்வதற்குப் பிறபாடு இதெல்லாம் தெளிவாகும்.

SRI N. MARUDACHALAM : அரசாங்கத்தாரிடமிருந்து கிராண்ட் வாங்கி நடத்தப்படும் ஆரம்பப் பாடசாலைகள் சரிவர நடப்பதில்லை என்று ஏதாவது தகவல் வந்திருக்கிறதா ? அப்படி தகவல் வந்தால், அதை சரிவர நடத்துவதற்கு அரசாங்கத்தார் முன்வருவார்களா ?

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் தனி கேள்வி போட்டால் நன்றாக இருக்கும்.

*Sale of Edibles*

* 338 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government are aware of foodstuffs like idilies, thoasais and other edibles being sold, near bus-stands, street margins, etc., and

(*b*) the steps taken by the Government to prevent the same?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) The provisions of the Public Health Act and the Prevention of Food Adulteration Act are enforced by the Health staff to prevent the sale of foodstuffs in unhygienic surroundings.

SRI S. LAZAR : அப்படி சட்டம் இருந்தபோதிலும் ஒவ்வொரு இடத்திலும் விற்கப்படுகிறதே, அதைத் தடுப்பதற்கு என்ன நடவடிக்கை எடுக்கப்படுகிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அந்தச் சட்டத்தை மீறியும் செய்துகொண்டு வருகிறார்கள். அதற்காக இப்பொழுது புதிதாக, சென்னை நகரத்தை பொறுத்தமட்டில் ஒரு நோட்டிபிகேஷன் தெரிவித்து, அதை அம்மாதிரி விற்காமலிருப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.